12th February 1958] [Sri S. R. Munusami]

அந்த வகையில் தான் எஸ். ஆர். முனுசுவாமியும் தாழ்த்தப்பட்ட மக்களின் குறைகளை கொஞ்சம் எடுத்துச் சொல்லுவதற்காக அமர்ந்திருப்பது என அறிமுகப்படுத்துகிறேன். பல கற்களை போட்டு அது மலையாகக் குவிக்கிறார்கள் வழிநடை மாரியாத்தாள் என்று. அம்மாதிரி மாற்றுக் கட்சிகளை எட்டிலே உருவாக்குகிறீர்கள்.

நில சீர்திருத்தம் கொண்டுவரப்போவதாக கவர்னர் பெருமான் கூறியிருக்கிறார். அதிலே தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பிற்பட்ட மக்களுக்கும் ஏதாவது உரிமை இருக்கிறதா, சொந்தம் இருக்கிறதா என்று பார்த்தால், அதிலே காணோம். ஏனென்றால் அவர்களுக்கு நிலம் சொந்தம் கிடையாது. இருக்கக்கூடிய சர்க்கார நிலங்களையாவது கொடுக்குமா என்றால், அதுவும் இல்லை. இதை பத்து ஆண்டுகளாக சொல்லிக் கொண்டு வருகிறோம். பல முறை சொல்லி யிருக்கிறேன். அடுத்த இரண்டு ஆண்டுகளில் கொடுக்கத் தவறினால் நிலைமை வேறாகும். அடுத்தபடியாக, கையேர் வாரம், மாட்டு வாரம் ஆகிய இரண்டு வாரம்தார்களுக்கு அனுகூலமாக சட்டம் கொண்டு வந்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதில் அடங்காத ஒரு புது வாரம் இருக்கிறது. அரக்கோணம் தாலூக்காவில் வேலி, வேமங்களத்தில் அதுதான் பயிலேறு வாரம் என்ற ஒரு புது வாரம் இருக்கிறது. அதாவது 10-க்கு மூன்று வாரம். அது விஷயமாக ஏகாதசி தினத்தன்று ஓரிரவு பூராவும் போய் சமாதானம் செய்தேன். ஆனால் முடிவாகவில்லை. அந்த விஷயமாக உதவி சபாநாயகர் அவர்களை நாடலாம் என்று பார்த்துக் கொண்டிருக்கிறேன். பத்து கலத்திற்கு மூன்று கலம் கொடுக்கவேண்டும். ஆனால் $2\frac{3}{4}$ கலம் தான் கொடுக்கிறார்கள். அந்தக் கால் கலம் கொடுக்க முடியாது என்று சொல்லுகிறார்கள் காஞ்சிபுரம் முதலியார் முதலாளிகள். அங்குள்ளவர்கள் உயில் சீட்டு ஒன்றும் கிடையாது. மந்திரி அவர்கள் கேள்வி நேரத்தின்பொழுது உயில் சீட்டுகள் எல்லா வாரந்தார்களுக்கும் இருப்பதாகச் சொன்னார்கள். அப்படி ஒன்றும் கிடையாது. இதற்காக கேஸ் போட்டுள்ளோம். காஞ்சிபுரத்தில் அண்ணா வரக்கூடிய . . .

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again to-morrow morning at 8-30.

The House then adjourned.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. Statutory Rules, Orders and Notifications.

53. *Notification issued with G.O. Ms. No. 23; Home, dated 4th January* 1958, *amending rule* 319 *of the Madras Motor Vehicles Rules*, 1940. [*Laid on the table of the House under section* 133 (3) *of the Motor Vehicles Act*, 1939 (*Central Act IV of* 1939).]

### B. Reports and other papers.

26. *Report of the Joint Select Committee on the Madras Bhoodan Yagna Bill*, 1957 (*L.A. Bill No.* 15 *of* 1957).